பற்பல இடங்களிலும் விசேஷ திதி நக்ஷத்திர காலங்களில் வேதாந்த காலக்ஷேபம் நடத்தி வருகிறார்கள். ஸாவதான மனதோடு ஸிரவணிக்கச் செய்ய சக்திவாய்ந்தவர். அநுபவத்திலும் விருத்தராவர். பிரதி வருஷம் மார்கழி மாதத்தில் பகவத்கீதையைத் தவறாமல் நடத்திவரும் பரம பாகவத சிரோமணியாவர்.

பிரஹ்மஸ்ரீ மல்லி. மு. சுப்பய்யர்.
தெற்கு மாசி வீதி, மதுரை.

பிரஹ்மஸ்ரீ. விவேகானந்த ஸ்வாமிகளின் சிஷ்யரான பிரஹ்மஸ்ரீ. மல்லி. மு. சுப்பய்யர் என்னும் பெரியார் தம் கிரஹத்திலும், ஸாதுக்கள் கிரஹத்திலும், வேதாந்த ஸிரவணம் நடத்திவருகிறார்கள். இது சுமார் 30-வருடகாலமாக நடைபெற்று வருகிறது. இவர் பிதாவிற்குப் பிள்ளையாக வேதாந்தவிசாரத்தில் இளம் பிராயத்திலிருந்தே பழக்கப்பட்டு கட்டளை முதல் வாசிஷ்டம் ஈறாக கிரமமாகப்பயின்ற உத்தமர்.

மதுரை மால் 1 தோப்பே. பத்மநாபய்யர்
கீதாநிலயம், மதுரை.

பிரஹ்மஸ்ரீ. யோகானந்த ஸ்வாமிகளின் அன்பார்ந்த சிஷ்யரும் கேட்டமாத்திரத்தில் முக்தியையளிக்கும் ஸ்ரீ பகவத் கீதையை ஆதி முதல் அந்தம்வரை மனனமுடையவரும் அதையே சதா மூல மந்திரமாக ஜெபித்துக்கொண்டிருப்பவரும் அதனிடம் உள்ள பக்தி சிரத்தைக்காக உலக சிரேஷ்டர் மஹாத்மா காந்தியால் புகழப் பெற்றவருமான பிரஹ்மஸ்ரீ. தொப்பே. பத்மநாபய்யர் அவர்கள்,

मलनिर्मोचनं पुंसां जलस्नानं दिने दिने
सकृत्गीता मृतस्नानं संसारामय भोषजं।

என்கிற ஸ்ரீ சங்கர பகவத்பாதாளின் வாக்கியாமிர்தத்திற்கிணங்க ஸ்ரீ பகவத்கீதா பாராயணமும் காலக்ஷேபமும் செய்து வருகிறார்கள். ஸாந்தத்திலும் கவி ஸாஹித்யத்திலும் மிக பிரசித்தி பெற்றவர்கள். தேச நன்மைக்காக பொது விஷயங்களிலும் தம் ஜீவிய காலம் முற்றும் செலவழிக்கும் தீரர். இவர் ஸ்ரீ அத்வைத பிரகடனஸமாஜத்தில் முக்கியஸ்தர். நிவர்த்திமார்க்கத்திலே இருந்துவருகிறார்கள்.

ஸ்ரீ அத்வைத பிரம்ம ஸமாஜம்.

கீழ ராஜ வீதி, பரமக்குடி.

மதுரை ஸ்ரீ பிரம்மானந்த ஸ்வாமிகள் மடாதிபதி ஸ்தானத்தை வஹித்து திவ்ய ஸாந்தமே திரு உருவு கொண்டு எழுந்தருளிய ஸ்ரீலஸ்ரீ அத்வைதானந்த ஸ்வாமிகளின் சிஷ்யரும் வேதாந்த இலக்ஷண கிரந்தத்திலும் அநுபூதியிலும் பிரசித்தி பெற்ற ஸ்ரீ காசியாபிள்ளை என்கிற காசி விஸ்வநாத சுவாமியவர்களாலும் ஸ்ரீ ஜகத்குரு ஸங்கர பகவத்பாதாளின் மடத்திலிருந்தே உலகோருக்கு அத்வைதரஸம் பெருக தம் ஸத்குரு நாதரால் ஸாஸ்திர ரத்தினம் எனப்புகழ் பெற்ற பிரம்மஸ்ரீ. தேதியூர் சுப்ரமண்ய சாஸ்திரிகளாலும் வேதாந்தசிரவணத்தில் ஆதரவளிக்கப் பெற்றவரும், நம் ஸமாஜத்தின் அன்பின் மிகுதியால் பற்பல தேசங்களில் அத்வைதபிரசங்கம் செய்பவருமான, ஸாது பிரஹ்மஸ்ரீ. கந்தலுவா. சீதாராம பாகவதர் அவர்களால் 19-வருட காலமாக ஆத்மார்த்தவிஷயங்களை விரிவாக எடுத்துரைத்தும் அவர்களாலேயே விருத்தியடைந்து வந்த இச்சமாஜம் தற்போது குருகுலவாஸியும் ஸாக்கோட்டை ஸ்ரீ சங்கர ஸ்வாமிகளின் சிஷ்யரான ஸாது பிரஹ்மஸ்ரீ சி. கு. இராமஸாமி அய்யர் அவர்களால் வேதாந்த சிரவணம் நடந்து வருகிறது. இது நமது கிளையேயாயினும் இது அவ்வூரில் பிரஸித்தி பெற்ற வேதாந்தமடம். அநேக ஸாதுக்கள் தங்குவதற்கு மிக சௌகரிய முற்றிருக்கிறது. கோவிலூர் மடக்கிரமமாக பாடம் நடைபெற்று வருகிறது.

பிரஹ்மஸ்ரீ. விடி. அ. வேங்கட்ராமய்யர்.

மைனு தெப்பக்குளம் 1-வது தெரு, மதுரை.

பிரஹ்மஸ்ரீ. புளியடி. மு. கிருஷ்ணசாமி அய்யர் அவர்களின் சிஷ்யரான ஸாது ஸ்ரீ விடி. அ. வெங்கட்ராமய்யரவர்கள் தம் கிரஹத்திலேயே தினந்தோறும் மாலை 7-மணி முதல் 9-மணிவரை வேதாந்த சிரவணம் நடத்திவருகிறார்கள்.

சிவகிரி காந்தியடிகள்.

காஞ்சீபுரம் மடாதிபதி ஸ்ரீ நிச்சல ராமாநந்தச் சுவாமிகள் சிஷ்யரும் யோகசித்தி பெற்றவரும் பிரஹ்மஞானத்தில் மிகவும்

முதிர்ந்த அநுபவம் உடையவருமான "குட்டி தேவன்" என்கிற பிரஹ்மஸ்ரீ சதாநந்த சுவாமிகள் வைகை வடகரையிலுள்ள பிரஹ்மஸ்ரீ. V. S. கிருஷ்ணசாமய்யர் & பிரதர்ஸைச் சேர்ந்த ஸ்ரீ பிரஸன்ன வேங்கடேஸ்வர சுவாமிகளின் தசாவதார காட்சி யளிக்கும் மண்டபத்திற்கு மேல் புறமுள்ள மடாலயத்தில் சமாதியுற்றிருக்கிறார்கள்.

இச்சுவாமிகளின் முக்கிய சிஷ்யரும் பிரம்மாநந்தஸ்வாமிகளின் மடத்தினதிபதியான ஸ்ரீலஸ்ரீ அத்வைதானந்த ஸ்வாமிகளின் பக்தரும், வேதாந்த இலக்ஷண கிரந்தத்தில் தேர்ந்த ஸ்ரீ காஸிவிஸ்வநாத சுவாமி யவர்களால் இலக்ஷண கிரந்தாதி ஆராய்ச்சியில் மிக்க ஆதரவளிக்கப் பெற்றவரும், நம் ஸமாஜத்திலும் சமாதி சாக்ஷாத்கார சபையிலும் சிறந்தவருமான பிரம்மஸ்ரீ மாணிக்கா. ரூம. ராமசாமி அய்யர் பிர்மசாரி ஆஸிரமத்திலேயிருந்து குருகுல வாஸம்செய்து பற்பல தேசங்களிலுள்ள முமுக்ஷுக்களுக்கு விளக்கிக் காட்டியும், பரமவைராக்யமுற்று வேதாந்த இலக்ஷண கிரந்தங்களை உபன்யஸித்தும், ஆத்மவித்தையில் மிக்க தேர்ச்சியுற்றும், ஸாந்த குணத்திலும் வைராக்கியத்திலும், நுண்ணிய ஆராய்ச்சியிலும் மிக்க பிரஸித்திபெற்றும் விளங்குகிறார்கள். புகழையோ லாபத்தையோ எதிர்பாராமல் பிறருக்குத் தன்னாலியன்ற சேவை செய்வதில் பின்வாங்காத உத்தமகுணம் வாய்ந்தவர்.

ஸ்ரீ பிரம்மாநந்தாஸ்ரமம்,

பந்தடி 5, குறுக்குத்தெரு, மதுரை.

பிரஹ்மஸ்ரீ ஸங்கரானந்தஸ்வாமிகளின் ஸிஷ்யரும்; பரமகாருண்ய மூர்த்திகளான ஸ்ரீ அத்வைதாநந்த ஸ்வாமிகளால், அத்யாத்ம வித்தையில் அலங்கரிக்கப் பெற்றவரும், சுமார் 33 வருடகாலமாக அநுபூதியில் தேர்ந்தவர்களுமான பிரம்மஸ்ரீ ஸாது நாட்டாண்மை. சு. சொக்கய்யர் என்னும் பெரியார் தம் கிரஹத்திலேயே வேதாந்த சிரவணம் மாலை 6½-மணிமுதல் 8-மணிவரையில், ஆராய்ச்சியில் தேர்ந்த முக்கிய ஸாதுக்களோடு சிரவணித்து வருகிறார்கள்.

சமாதி சாக்ஷாத்கார சபை, மதுரை.

இது வைகை வடகரையிலுள்ள தபோவனத்தில் பிரதி ஞாயிற்றுக்கிழமை மாலை 6-மணிமுதல் 9-மணிவரை நடைபெற்று

வருகிறது. இங்கு பல சாதுக்கள் விஜயம் செய்கிறார்கள். முதலில் ½-மணிநேரம் சமாதி பழகிவருகிறார்கள். பிறகு வேதாந்த விஷயமாக 2½-மணிநேரம் சங்கை சமாதானங்கள் நடைபெற்று வருகின்றன. சாது ஸ்ரீ P. K. இராமாச்சாரி அவர்கள் இதை ஸ்தாபித்து நடத்திவருகிறார்கள். இச்சபை ஸ்ரீ அத்வைதப் பிரகடன சமாஜத்தின் கிளைச்சபையாகும். இலட்சுமி கடாட்சமும், சாதுசங்கத்தில் அளவுகடந்த பற்றும்கொண்ட சாது ராமாச்சாரியார் அவர்கள், வேதாந்தவிஷயமாகத் தமிழிலுள்ள இலக்ஷண கிரந்தங்களை முற்றும் வழுவறக் கற்றதோடு, இந்து மதத்திற்குப் புத்துயிரளித்த ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்ஸ தேவரென்ன, ஸ்ரீ விவேகானந்த சுவாமிகளென்ன, ஸ்ரீ இராமதீர்த்த சுவாமிகளென்ன, இத்தியாதி மஹான்களால் எழுதப்பட்ட நூல்களையும், உபன்னியாசங்களையும் நன்றாய்ப் பயின்ற அறிவு முதிர்ச்சியுள்ளவராதலால், மேற்சொன்ன அத்வைதப் பிரகடன சமாஜத்திற்கும், அதன் கிளை ஸ்தாபனங்களுக்கும், ஒப்பற்ற வழிகாட்டியாகவும், ஆணிவேர் போலவும் இருந்துவருகிறார். தவிர இராமகிருஷ்ண விஜயம் என்னும் மாதசஞ்சிகைக்கு அடிக்கடி சந்தேக வினாக்களை விடுத்து அதற்கு வெ சஞ்சிகைமூலமாய்ப்பதில் வெளிப்படுத்துவதன் மூலமாய் தமிழுலகத்திற்கே மகத்தான சேவையும் செய்து வருகிறார்.

### பிரஹ்மஸ்ரீ யோகானந்த சுவாமிகளின் மடாலயம்
### அழகரடி வயல் மதுரை.

யோகத்திலும் ஞானத்திலும் பிரசித்திபெற்ற மகானாய் அகாமஹத ஸ்ரோத்திரிய பிரம்ம நிஷ்டராய் விளங்கும் மகான் பிரம்மஸ்ரீ யோகானந்த ஸ்வாமிகள் மதுரை நகரத்தின் வடமேற்கு பாரிசத்தில் பொன்னகரத்தில் "வாழைத்தோட்ட மடம்" என்றுவழங்கும்தமது அழகிய மடத்தில் இருந்து கொண்டு தம்மையண்டின முமுக்ஷுக்களுக்கும் பக்தர்களுக்கும் அவரவர் பக்குவத்திற்கேற்றபடி உபதேச மொழிகளைச்சொல்லிக்கொண்டும், மடத்தைச்சுற்றிலுமுள்ள ஏழை ஜனங்களுக்கு வைத்திய சிகிச்சை செய்து கொண்டும், அன்னதானத்தை அடிக்கடி செய்துகொண்டும், பிள்ளைகளுக்காக மடத்துச்செலவில் பள்ளிக்கூடம் வைத்து இலவசமாகக் கல்விபோதிக்கச்

செய்து கொண்டும் வருகிறார்கள். இம்மடத்து அபிமானிகள் உள்ளூரிலேயே ஆயிரக்கணக்கில் இருப்பதோடு வெளியூர்களிலும் பல்லாயிரக்கணக்கில் இருக்கின்றனர். ஒவ்வொரு குரு பூஜைக்கும் மகேஸ்வர பூஜை இங்கு நடப்பது வெகு விமரிசையாகயிருக்கும். ஹரிஜனங்களிடத்தில் பேரன்பு கொண்ட இந்த சுவாமிகள் அடியார்களுக்கு அன்னமளிக்கும் போது பரிமாறும் சேவையில் தாமும் ஈடுபட்டு உற்சாகத்தோடு பாலியாவஸ்தைக்கொண்டு சேவைபுரிவது கண் கொள்ளாக்காட்சியாகவிருக்கும்.

பிரஹ்மஸ்ரீ N. R. குப்புசுவாமி அய்யர் சௌராஷ்ட்ர பிரசார மந்திர் மைனுதெப்பக்குளம் மதுரை.

சம்ஸ்கிருதத்திலும், ஹிந்தியிலும் நல்ல பாண்டித்யமுள்ள பிரஹ்மஸ்ரீ குப்புசாமி அய்யர் அவர்கள் தம்மைத்தேடி வரும் முமுக்ஷுக்களுக்கு பகவத்கீதை, பஞ்சதசி முதலிய வடமொழிக் கிரந்தங்களில் முறையாகப் பாடம் சொல்லிக்கொண்டு வைராக்ய உபரதிசீலராய்இருந்து வருகிறார். சென்னையில் பிரஹ்மஸ்ரீ. அருணசல சாஸ்திரிகளிடமும், நாராயண சுவாமி குருவினிடமும் சென்ற 30 வருடமாய்ப்பயின்று அனுபவமுள்ளவர். திருக்குறளில் சொல்லியுள்ள ஒவ்வொரு உண்மையையும் பொன்னெனப் போற்றக்கூடியவர்.

ஓம் தத் ஸத்.

V. S. இராமய்யர் அவர்கள்.
ஏகாம்பராச்சாரியார் ,,
தலைவர்கள்.

T. S. உமாபதி அய்யர்,
V. A. கிருஷ்ணய்யர்,
காரியதரிசிகள்.

ஆபீஸ்:—
267, இராமனுதபுரம் ரோடு,
மதுரை.

## 6-வது நமூனா.

வேதத்திற்கு சம்மதமான மதங்கள் 6. 1. பூர்வமீமாம்சை, 2. உத்தர மீமாம்சை, 3. நியாயம், 4. வைசேஷிகம், 5. சாங்கியம், 6. யோகம். இவைகளில் முக்கியமும், சிரேஷ்டமுமான உத்தர மீமாம்சை என்று சொல்லப்படும் வேதாந்தமாகும். இதன் சாரம் முமுக்ஷுக்களுக்கு உபயோகமாகும் பொருட்டு இங்கெழுதப்படுகின்றது.

விஷயம் — வேதாந்தத்தின்படி.

1. உலகம்: நாமரூப கிரியை வடிவமானது, மாயையின் பரிணாமம் சேதநத்தின் விவர்த்தம்.
2. உலகத்திற்குகாரணம்: உபாதானமும் நிமித்தமுமான ஈஸ்வரன்.
3. கடவுள்: மாயை விசேஷித்த சேதநன்.
4. ஜீவன்: அவித்தை விசேஷித்த சேதநன்.
5. பந்தம்: அவித்தையும் அதன் காரியமும்
6. பந்தத்திற்கு காரணம்: அவித்தை.
7. மோக்ஷம்: அவித்தையும், அதன் காரியமும் நீங்குவதை முன்னிட்ட பரமானந்த வடிவமான ப்ரஹ்மத்தை அடைதல்.
8. மோக்ஷ சாதனம்: ப்ரஹ்ம ஆத்ம ஒற்றுமை ஞானம்.
9. அதிகாரி: மலவிக்ஷேப தோஷங்களற்று நால்வகை சாதனங்களும் பெற்றவன்.
10. வெளியிட்ட ஆசிரியர்: வேத வியாசர்.
11. முக்கியமான காண்டம்: ஞானகாண்டம்.
12. வாதம்: விவர்த்த வாதம்.
13. ஆத்மாவின் பரிமாணமும் எண்ணும்: வியாபகனும் ஒருவனும்.
14. பிரமாணங்கள்: ஆறு (6.)
15. கியாதி: அநிர்வசநீயக்கியாதி.
16. சத்தை: பரமார்த்தத்தில் ஆத்மா உண்டென்பதும், உலகம் வியவகாரத்திலும், தோற்றத்திலும் உண்டென்பதும்.
17. உபயோகம்: தத்துவ ஞானத்தை முன்னிட்ட மோக்ஷம்.

## 7-வது நமூனு

வேதாந்த சாஸ்திரங்களில் இலக்ஷணக் கிரந்தங்களென சில இருக்கின்றன. அவைகளில் நுட்பமான வேதாந்த விஷயங்கள் தர்க்கத்தின் (Logic) வாயிலாக பரிசீலனை செய்யப்பட்டிருக்கின்றன. இந்த இலக்ஷணக் கிரந்தங்கள் வேதாந்த நூல்களை ஆழ்ந்து படிப்பவர்களுக்கும், பிரஹ்மசூத்திரம், பஞ்சதசி, சங்கர பாஷ்யம் முதலிய அரிய நூல்களைப் படித்துத் தெரிந்துகொள்ள விரும்புகிறவர்களுக்கும் மிகவும் உபயோகியாயிருக்கின்றன. ஆனால், இவைகளில் விளங்காத பல கடின பதங்கள் (Technical Terms) காணப்படுவதால், பலரால் படிக்க முடிகிறதில்லை. இக் கஷ்டத்தை நிவர்த்திக்க இந்த இலக்ஷணக் கிரந்தங்களில் காணப்படும் பல முக்கிய கடின பதங்களுக்கு இலக்கணம் கூறப்படுகின்றது.

**இலக்கணம்:** அவ்வியாப்தி, அதிவியாப்தி, அசம்பவம் என்னும் 3 தோஷங்களுமின்றி ஒன்றில் இருப்பதாகிய சிறந்த தர்மம்.

**அவ்வியாப்தி:** இலக்ஷியத்தின் ஏகதேசத்தில் இலட்சணம் இருத்தல். (உ-ம்) கபிலத்தன்மையுடையது பசு.

**அதிவியாப்தி:** இலக்ஷியத்தில் முழுவதும் வியாபித்து இலட்சணம் அல்லாததன் கண்ணும் இலட்சணம் இருத்தல். (உ-ம்) 4-கால்களுடையது பசு.

**அசம்பவம்:** இலக்ஷியத்தில் இலட்சணம் இல்லாதிருத்தல் (உ-ம்) ஒற்றைக்குளம்புடையது பசு.

**மங்கலம்:** எடுத்துக்கொண்ட நூல் இடையூறின்றி இனிது முடிவதற்கு நூலாசிரியரால் நூல் ஆரம்பத்தில் செய்யப்படும் மனோவாக்கு காயங்களின் கிரியை.

**புருஷார்த்தம்:** சகல மனிதர்களாலும் விரும்பப்படுவது (உ-ம்) அறம், பொருள், இன்பம், வீடு, (மோக்ஷம்.)

பந்தம்: அஞ்ஞானமும் அதன் காரியமும். காரியமாவது:— தேகத்தில் நான் என்றும் அதன் சம்மந்தமுடையதில் எனது என்றும் பிரபஞ்சத்தில் சத்தியம் என்றும் உண்டாகும் புத்தி.

மோக்ஷம்: சகல துக்கங்களின் நிவர்த்தியும் மிகுந்த ஆனந்தத்தின் அடைவும்.

துக்கம்: அஞ்ஞானத்தோடு ஜனனமரணாதிகள். இதன் 3-வகையாவன:—

1. அத்தியாத்மம்:—ரோகம், தாகம், பசி முதலியவைகளாலுண்டாவது.

2. அதிபூதம்:—திருடர், புலி, சர்ப்ப முதலியவைகளாலுண்டாவது.

3. அதிதேய்வம்:—யக்ஷ, ராக்ஷஸ, கிரக, பிரேத, குளிர் காற்று, வெயில் இவைகளாலுண்டாவது.

அவாந்திர வாக்கியம்: பரமாத்மாவினது அல்லது ஜீவனது சொரூபத்தை அறிவிக்கும் வாக்கியம் (உ-ம்) சத்யம் ஞானம் ஆனந்தம் பிரஹ்மம்.

மகாவாக்கியம்: ஜீவ பரமாத்மாக்களின் ஏகத்துவத்தை அறிவிக்கும் வாக்கியம்.

1. பிரஞ்ஞானம், ஆனந்தம், பிரஹ்மம். இது இருக்கு வேதத்தின் ஐதரேய உபநிஷத்.

2. அகம் பிரஹ்மாஸ்மி. இது எஜுர் வேதத்தின் பிருகதாரணிய உபநிஷத்.

3. தத்துவமசி. இது சாமவேதத்தின் சாந்தோக்கிய உபநிஷத் (உபதேச வாக்கியம்.)

4. அயமாத்மா பிரஹ்மம். இது அதர்வண வேதத்தின் மாண்டூக்கிய உபநிஷத்.

**வாச்சியார்த்தம்:** சப்தத்தால் நேரே அறியப்படும் அர்த்தம் (பொருள்.) இதனையே சக்தியார்த்தம் என்றும் கூறுவர்.

**லட்சியார்த்தம்:** சப்தத்தால் பாரம்பரையாக அறியப்படும் பொருள். (உ-ம்) பழத்தைக் கூப்பிடு. இதில் பழம் = கனி, வாச்சியார்தம். பழம் = பழக்காரி, லட்சியார்த்தம்.

**இலக்ஷணை:** சப்தத்திற்கு அர்த்தத் தோடுள்ள பரம்பரா சம்பந்தம். இது 3 வகை. 1. விட்ட இலக்கணை. 2. விடாத இலக்கணை 3. விட்டுவிடாத இலக்கணை.

**விட்டுவிடாத இலக்கணை:** ஒரு வாக்கியத்தில் விரோத பாகம் விட்டு விரோத மின்றிய பாகம் கொள்ளுதல் (உ-ம்)

**"அவனே இவன்:"** இதில் அவன் என்பதிலுள்ள அந்த தேச காலத்தையும், இவன் என்பதிலுள்ள இந்த தேச காலத்தையும் விட்டு தனி மனிதனை மாத்திரம் கொள்ளுதல்.

**பதார்த்த சோதனம்:** சமஷ்டி வியஷ்டி பிரபஞ்சத்தினின்றும், பிரஹ்மத்தையும் ஆத்மாவையும் விவேகித்தல்.

**பரோக்ஷ ஞானம்:** சச்சிதானந்த பிரஹ்மம் இருக்கிறது என்று அறிதல்.

**அபரோக்ஷ ஞானம்:** (சந்தேக விபரீத மின்றி சச்சிதானந்த பிரஹ்மம் நான் என்று அறிதல்.) தேகத்தில் நான் என்று அஞ்ஞான காலத்தில் வருவதுபோல் பிரஹ்ம அபின்னமாகிய ஆத்மாவில் நான் என்று உண்டாகுதல்.

1. மலம்: நிஷித்த கர்மத்திலாவது, விஷயத்திலாவது இச்சையை உண்டாக்கும் ஜன்மாந்திரங்களில் செய்யப்பட்ட அசுபகர்மங்களால் உண்டாகி யிருக்கிற அதிசூட்சுமமான சமஸ்காரம். இதனையே பாபம் என்றும், அதிர்ஷ்டம் என்றும், அபூர்வமென்றும் கூறுவர். இது அந்தக் கரணத்திலுள்ள தோஷம். பிரஹ்மஞானத்திற்குத் தடை. நிஷ்காம கர்மம், பூததயை, ஈஸ்வரநாம உச்சாரணம் முதலியவைகளால் நிவர்த்தியாகும்.

2. விக்ஷேபம்:—வேதாந்தத்தின் சிரவண முதலியவற்றிலாவது மகா வாக்கியத்தின் அர்த்தமாகிய தனது சொரூபத்திலாவது ஸ்திரமாய் நிற்காமல் சித்தம் சஞ்சலம் அடைதல். இது அந்தக் கரணத்திலுள்ள தோஷம். பிரஹ்மஞானத்திற்கு தடை. இது ஈஸ்வர மூர்த்தி தியானம் அல்லது நிர்க்குண பிரஹ்ம சிந்தனம் முதலிய உபாசனைகளால் நிவர்த்தியாகும்.

3. ஆவரணம்: பிரஹ்ம ரூப ஆத்மாவை நான் அறியேன் என்று உண்டாகும் புத்தி. இது தத்துவ ஞானத்தால் நிவர்த்தியாகும்.

மலம், விக்ஷேபம், ஆவரணம் இந்த 3-ம் அந்தக் கரணத்திலுள்ள தோஷங்கள், பிரஹ்ம ஞானத்திற்கு தடை செய்வன. ஆகையால், முமுக்ஷுக்கள் நிவர்த்திக்க வேண்டும்.

அஞ்ஞானம்: யான் அறியேன் என்னும் வியவகாரத்திற்கு ஏதுவாகிய ஆவரண விக்ஷேப சக்திகளையுடைய அநாதி பாவ ரூப பதார்த்தம். இதனையே மாயை, பிரகிருதி, அவித்தை, சக்தி, அவ்வியக்தம், அநிர்வசநீயை என்றும் கூறுவர்.

விக்ஷேபம்: ஸ்தூல சூட்சும காரண பிரபஞ்சம்.

சிரவணம்: உபக்கிரம உபசம்மாராதி 6 லிங்கங்களால், வேதாந்த வாக்கியங்களின் அத்வைதார்த்தத்தை நிச்சயம் செய்தல். குருவினிடத்தில் வேதாந்த சாஸ்திரத்தைக் கேட்டல், இதற்கு சாதனமாக இருத்தலின் இதுவும் சிரவணம் எனப்படும்.

மனனம்: ஜீவப்பிரஹ்மங்களின் அபேதத்திற்குச் சாதகமான யுக்திகளாலும் பேதத்திற்குப் பாதகமான யுக்திகளாலும் அத்விதீய பிரஹ்மத்தை சிந்தனைசெய்தல்.

நிதித்தியாசனம்: அநாத்மாகார விருத்தியின் மறைப்பின்றிய பிரஹ்மாகார விருத்தியின் ஸ்திதி.

சமாதி: நிதித்தியாசனத்தின் பரிபாக அவஸ்தை.

சாக்ஷாத்காரம்: சகல அநாத்மாகார விருத்திகளின் நிரோதமுண்டாக பிரஹ்மாகார விருத்தியில் உண்டாம் நான் பிரஹ்மம் என்னும் விருத்தி. அதுவே "யான் பிரஹ்மம்" என்னும் ஞானமாம். இதனையே அபரோக்ஷ ஞானம் என்றும், பிரஹ்மஞானம் என்றும், தத்துவஞானம் என்றும் கூறுவர்.

உபாதி: (எந்த வஸ்து) தனது ஆசிரயத்தின் சொரூபத்தில் பிரவேசியாது அவ்வாசிரயத்தினைப் பிறபதார்த்தங்களினின்றும் வேறு பிரித்தறிவிப்பது. (உ-ம்) கடம். கடம் தனது ஆசிரயமாகிய கடாகாயத்தின் சொரூபத்தில் பிரவேசியாது, அக்கடாகாயத்தினை மற்ற மகாகாய முதலியவற்றினின்றும் வேறு பிரித்தறிவிப்பது போலவாம்.

விசேஷணம்: தனது ஆசிரயத்தின் சொரூபத்தில் பிரவேசித்து, அவ்வாசிரயத்தினைப் பிற பதார்த்தங்களினின்றும் வேறு பிரித்தறிவிப்பது.

(உ-ம்) நீலக்குடத்திலுள்ள நீல நிறம் தனது ஆசிரயமாகிய குடத்தின் சொரூபத்தில் பிரவேசித்து, அக்குடத்தை மற்ற வெண்குட முதலியவற்றினின்றும் வேறு பிரித்தறிவிப்பதாயிருப்பது போல. மேஜையின் மேல் ஒரு புஸ்தகம் வைக்கப்பட்டிருந்தால் மேஜை புஸ்தகத்தின் ஆசிரயம், புஸ்தகம் மேஜையின் ஆசிரிதம்.

தர்மம்: வேறொன்றை ஆசிரயிப்பதாய் சுதந்திரமின்றி யிருப்பது. இதனையே சக்தி என்றும் கூறுவர்.

காரணம்: எதன் இருப்பால் காரியத்தின் உற்பத்தி உண்டாகிறதோ எதன் இன்மையால் காரியத்தின் உற்பத்தி உண்டாகிறதில்லையோ அப்படிப்பட்ட காரியத்திற்கு மறைப்பின்றிய முற்காலத்திலிருப்பது.

நிமித்தம்: உற்பத்தி மாத்திரத்தின் காரணம். அது கடத்திற்கு நிமித்த காரணம், குலாலன், தண்டம், சக்கரம் முதலியன வாதல்போலவாம்.

உபாதானம்: உற்பத்தி, ஸ்திதி, லயங்களின் காரணம். மண் கடத்தின் உற்பத்தி, ஸ்திதி, லயங்களுக்கு காரணமாயிருந்து உபாதானம் ஆதல் போலவாம்.

அத்தியாசம்: தான் வாஸ்தவமாக இல்லாத இடத்தில் தான் கற்பிதமாக தோற்றுதல். (உ-ம்) வாஸ்தவமாக இல்லாத பாம்பு, கயிற்றில் கற்பிதமாக தோற்றுதல். இதனையே பிராந்தி என்பர்.

அத்தியாயரோபம்: சத்திய வஸ்துவாகிய பிரஹ்மத்தில் பொய் வஸ்துவாகிய அஞ்ஞானத்தையும் அதன் காரியமாகிய ஸ்தூல சூட்சும பிரபஞ்சத்தினையும் கூறுதல்.

அபவாதம்: ஸ்தூல சூட்சும பிரபஞ்சமும், அதன் காரணமாகிய அஞ்ஞானமும், அதனதன் காரணங்களில் லயிக்க எஞ்சிய அதிஷ்டான பிரஹ்மம் மிஞ்சுதல்.

சோபாதிகம்: உபாதியோடு கூடிய அஞ்ஞானத்தால் தோன்றும் பிராந்தி (உ-ம்) கண்ணாடியில் பிரதிபிம்பம். ஜகத்து.

நிருபாதிகம்: கேவல அஞ்ஞானத்தால் தோன்றும் பிராந்தி. (உ-ம்) ரஜ்ஜுவில் சர்ப்பம்.

விருத்தி: "இருக்கிறது" என்னும் வியவகாரத்திற்கு ஏதுவாகிய அவித்தை அந்தக்கரணங்களின் பரிணாமம். சிலர் விளக்க பரிணாமத்தினை விருத்தி என்பர். (உ-ம்) சுகம், துக்கம், ராகம், துவேஷம், முதலியன.

பிரமை: யதார்த்த அநுபவம். (உ-ம்) சத்தியப் பொருள்களின் ஞானமாகிய கடம், படம் முதலியன.

அநுபவம்: ஸ்மிருதியின் வேறாகிய ஞானம் (உ-ம்) யானை.

ஸ்மிருதி: உற்போத (வெளிப்பட்ட) சம்ஸ்கார மாத்திரத்தினால் தோன்றும் ஞானம். முன் பார்க்கப்பட்ட யானையின் ஞானம்.

சம்சயம்: 2 அல்லது பல பட்சங்களுடைய ஞானம் (உ-ம்) கயிறோ, பாம்போ. அல்லது கயிறோ, பாம்போ, பூமாலையோ, பூமியின் வெடிப்போ, நீர்த்தாரையோ என்னும் ஞானம்.

நிச்சயம்: சம்சயத்தின் வேறாகிய ஞானம்.

பிரமாணம்: பிரமையின் காரணம்.

பிரமேயம்: பிரமா + விஷயம்.

பிரமாதா: பிரமா + கர்த்தா.

வாசனை: அநுபவஜன்னிய சம்ஸ்காரம்.

கர்மம்: மனம் வாக்கு காயங்களின் கிரியை.

சஞ்சிதம்: ஜன்மாந்திரங்களில் சேர்க்கப்பட்ட கர்மம்.

ஆகாமியம்: வர்த்தமான ஜன்மத்தில் செய்யப்படும் கர்மம்.

பிராரப்தம்: வர்த்தமான ஜன்மத்தின் ஆரம்பத்திற்கு ஏதுவான கர்மம்.

ஜீவன்முக்தி: தேகாதிப் பிரபஞ்சம் தோற்றிக் கொண்டிருக்க பிரஹ்ம சொரூபமாக நிலைத்தல்.

விதேகமுக்தி: பிரபஞ்சத் தோற்றமின்றிய பிரஹ்ம சொரூப நிலை.

ஜீவன்: சிதாபாசனோடு கூடிய அந்தக்கரணத்தோடு கூடஸ்த சைதன்னியம்.

ஈஸ்வரன்: சிதாபாசனோடு கூடிய மாயையோடு பிரஹ்ம சைதன்னியம்.

சமஷ்டி: அநேக பதார்த்தங்கள் ஒன்றாக விஷயமாவது (உ-ம்) பல மரங்கள் நிறைந்த இடம் காடு எனப்படுவது போல.

வியஷ்டி: அநேக பதார்த்தங்கள் தனித்தனியாக விஷயமாவது. (உ-ம்) வனத்திலுள்ள அநேக மரங்கள் தனித்தனியாக விஷயமாவது போல.

பிரஹ்மம்: எல்லாவற்றினும் அதிக வியாபகமாக இருப்பது. ஆகையால் எங்கும் நிறைந்திருப்பது.

மித்தை: பொய் என நிச்சயிக்க யோக்கிய முடைய பொருள். இதையே பாதம், சத் அசத்து விலக்ஷணம், அநிர் வசனீயம் என்றும் கூறுவர்.

தாதாத்மிய சம்பந்தம்: சத்திய வஸ்துவிற்கும் கற்பித வஸ்துவிற்கும் உண்டாகும் சம்பந்தம். (உ-ம்) பிரஹ்மத்திற்கும் மாயைக்கும்; கயிற்றிற்கும் பாம்பிற்கும் உள்ள சம்பந்தம் போல.

சையோகம்: இரண்டு சத்திய வஸ்துகளுக்கு உள்ள சம்பந்தம். (உ-ம்) நமஸ்காரம் செய்யும்போது 2 கைகளுக்கும் உள்ள சம்பந்தம் போலும்.

சாமானியம்: பிராந்தி காலத்திலும் பிராந்தி நிவிருத்தி காலத்திலும் தோற்றுவது. இதனை ஆதாரம் என்றும் கூறுவர். (உ-ம்) இரஜ்ஜுவிலும் சர்ப்பத்திலும் உள்ள இது என்னும் தன்மை.

**விசேஷம்:** எது பிராந்தி காலத்தில் தோற்றுவதில்லையோ எதன் தோற்றத்தால் பிராந்தி நீங்குகின்றதோ அது விசேஷம். இதனை அதிஷ்டானம் என்றும் கூறுவர். (உ-ம்) சர்ப்பமாக தோற்றும் பொழுது இரஜ்ஜு தோற்றாமல், இரஜ்ஜு தோற்றும் பொழுது சர்ப்பம் நிவர்த்தியாவதால் இரஜ்ஜு விசேஷம்.

**கற்பிதவிசேஷம்:** எது அஞ்ஞான காலத்தில் தோற்றுகின்றதோ ஞானகாலத்தில் தோற்றுகிறதில்லையோ அது கற்பித விசேஷம். இதனையே அத்தியஸ்தம், பிராந்தி என்றும் கூறுவர். (உ-ம்) சர்ப்பம் கயிற்றின் அஞ்ஞானகாலத்தில் தோற்றி, ஞானகாலத்தில் தோற்றாததால் கற்பித விசேஷமாம்.

**பாதம்:** பொய் என்னும் நிச்சயம்.

**வியாவகாரிகசத்தை:** எந்தப் பதார்த்தம் பிரஹ்ம ஞானமின்றிப் பாத முண்டாகிறதில்லையோ, ஆனால் பிரஹ்ம ஞானத்தினாலேயே பாதமுண்டாகிறதோ அந்தப் பதார்த்தம் வியாவகாரிகசத்தை யுடையது. (உ-ம்) பிரபஞ்சம்.

**பிராதிபாசிகசத்தை:** எந்தப் பதார்த்தம் பிரஹ்ம ஞானமின்றி அதிஷ்டான ஞானத்தினால் பாத முண்டாகிறதோ அந்தப்பதார்த்தம் பிராதிபாசிக சத்தையுடையது. (உ-ம்) ரஜ்ஜு சர்ப்பம் சுவப்பன பதார்த்தம்.

**பாரமார்த்திகசத்தை:** எந்தப் பதார்த்தம் முக்காலத்திலும் எந்த ஞானத்தாலும் பாத முண்டாகிறதில்லையோ அந்தப் பதார்த்தம்பாரமார்த்திக சத்தை யுடையது. (உ-ம்) பிரஹ்மம்.

விவேகம்: ஆத்மா நாசமின்றியது; இதற்கன்னியமான தேகாதிப் பிரபஞ்சம் நாசமுடையது என்று வேறு பிரித்து அறிதல்.

வைராக்கியம்: இவ்வுலக பரலோக விஷயங்கள் துக்கத்தைக் கொடுப்பன வென்று அறிந்து அவைகளிடத்தில் இச்சையில்லாதிருத்தல்.

சமம், தமம், விடல், சகித்தல், சமாதானம், சிரத்தை

இந்த 6ம் சேர்ந்து ஒன்று. இதன் திரண்ட அர்த்தமாவது:- மனதையும், இந்திரியங்களையும் பஞ்சவிஷயங்களில் போகவிடாமல் தடுத்து, மனதை பிரஹ்மத்தினிடத்தில் நிறுத்துதல்.

முமுக்ஷுத்துவம்: மோக்ஷம் அடைய வேண்டுமென்கிற தீவிரமான இச்சை.

சத்து: மூன்று காலத்திலும் பாதிக்கப் படாதது.

சித்து: மூன்று காலத்திலும் எல்லாவற்றையும் அறிவது.

ஆனந்தம்: மூன்று காலத்திலும் பரமப்பிரேமைக்கு விஷயமாவது.

அத்வைதம்: இரண்டற்றது.

கூடஸ்தன்: கொல்லனது சம்மட்டியைப் போல விகாரமடையாமலிருக்கும் சேதனம்; அல்லது கூடமாக (நிச்சலத் தன்மையாக) இருக்கும் சேதனம்.

சாட்சி: அந்தக்கரணத்திலும் அந்தக்கரணவிருத்தியிலும் இருக்கும் சேதனம்.

ஜாக்கிரம்: சொப்பன சுழுத்திகளுக்கு வேறாய், இந்திரிய ஜந்ய ஞானத்திற்கும், இந்திரிய ஜந்ய ஞான சம்ஸ்காரத்திற்கும் ஆதார காலம்.

சொப்பனம்: இந்திரியத்தினலுண்டாகாத விஷய கோசர அந்தக் கரணத்தினது அபரோக்ஷ விருத்தியின் காலம்.

**சுழுத்தி:** சுககோசரமு (சுகத்தை விஷயஞ் செய்வது)ம் அவித்தியாகோசரமுமாகிய அவித்தியாவிருத்தியின் காலம்.

**பரிணாமம்:** முன் உருவத்தை விட்டு வேற்றுருவத்தை யடைதல்; அல்லது உபாதானத்தின் சமான சத்தை யுடைய வேற்றுருவம். (உ-ம்) பாலின் பரிணாமமாகிய தயிர் போல. இதனையே விகாரம் என்றும் கூறுவர்.

**விவர்த்தம்:** அதிஷ்டானத்தினும் விஷமசத்தை (அற்பமும் பின்னமுமாகிய சத்தை) யுடைய வேறு விதமாகிய வடிவம். (உ-ம்) இரஜ்ஜுவின் விவர்த்தமாகிய சர்ப்பம் போல. இதனை கற்பித காரியம், கற்பித விசேஷம் என்றும் கூறுவர்.

**அதிகாரி:** நான்கு சாதனங்களோடு கூடினவனும், பிரஹ்ம நிஷ்டராகிய குருவினது வாக்கியத்திலும் வேதாந்த சாஸ்திரத்திலும் பரம விசுவாசமுடையவனும், ஒரு போதும் குதர்க்கம் செய்யாதவனும், சொரூபத்தை அறிய வேண்டுமென்னும் தீவிர இச்சையுள்ளவன்.

**பாமரன்:** இகலோகத்தில் நிஷித்தமாயும் விகிதமாயு மிருக்கிற போகங்களில் ஆசக்தியுள்ள சாஸ்திரசம்ஸ்காரமின்றியவன்.

**விஷயி:** சாஸ்திரானுசாரமாக விஷய போகங்களை அடைய கர்மம் செய்பவன்.

**ஜிஞ்ஞாசு:** பிரஹ்மத்தினது உண்மையை அறியுமிச்சையுடையவன்.

**முக்தன்:** ஸ்தூல சூட்சும காரண சரீரங்களுக்கு பின்னமாயுள்ள தன் சொரூபத்தை பிரஹ்ம ரூபமாக அபரோக்ஷமாய் அறிபவன்.

**சைதன்னியம்:** எது ஞானவடிவமாய் சகல கடாதி பிரபஞ்சங்களையும் அறிகிறதோ, எதை அந்நியமாகிய மன இந்திரியாதிகளெவையும் அறியமாட்டாவோ அது சைதன்னியம்.

ஜடம்: தன்னை அறியாததும் மற்றவைகளை அறியாததுமான அஞ்ஞானமும் அதனது காரியமாகிய பூத பௌதிக பதார்த்தங்கள்.

திருஷ்டாந்தம்: வாதிப் பிரதிவாதிகள் இருவர் அங்கீகரித்த பதார்த்தம். இதனையே உதாரணம் என்றும் கூறுவர்.

தாஷ்டாந்தம்: திருஷ்டாந்தத்தினால் சித்தித்தது. இதனையே சித்தாந்தம் என்றும் கூறுவர்.

விசாரம்: ஆத்மாநாத்மாக்களை வேறு பிரித்து அறிதல்.

திருபுடி: அத்தியாத்மம், அதிதெய்வம், அதிபூதம் என்னும் மூன்றும் சேர்ந்தது.

குரு: சுருதிகளை சந்தேக விபரீதமின்றி அறிந்தவரும் பிரஹ்மானுபவமுடையவரும்.

## 8-வது நமூனா.

சத்தியமாகத் தோன்றும் ஜாக்கிர பதார்த்தங்கள் பொய்யான சொப்பன பதார்த்தங்களினும் சிறிதும் விலக்ஷணத்தன்மையில்லாததால் ஜாக்கிரம் சொப்பனத்திற்குச் சமம் என்பதை கீழ்கண்ட யுக்திகளால் அறிந்து கொள்ளலாம்.

1. ஜாக்கிர பதார்த்தங்கள் சத்தியமென்றும், சொப்பன பதார்த்தங்கள் பொய் என்றும் எல்லோருடைய அனுபவம். ஆராய்ந்து பார்க்கில், சொப்பன பதார்த்தங்களும், ஜாக்கிர பதார்த்தங்களைப் போலவே சொப்பனம் காணும் பொழுது சத்தியமாகவே தோன்றுகின்றன. சொப்பன அவஸ்தையும் ஜாக்கிர அவஸ்தையாகவே தோன்றுகிறது. மேலும் ஜாக்கிர காலத்தில் போலவே சொப்பனத்திலும் மலை, நதி போன்ற சத்திய பதார்த்தங்களும், ரஜ்ஜு சர்ப்பம், கானல் நீர் போன்ற பொய்ப் பதார்த்தங்களும் தோன்றுகின்றன.

2. சொப்பனத்தில் பதார்த்தங்கள் மனதினால் சரீரத்திற்குள்ளேயே கற்பிக்கப் படுகின்றன. ஜாக்கிரத்தில் பதார்த்தங்கள்

சரீரத்திற்கு வெளியே இருப்பனவாகவும், ஞானேந்திரிய கர்மேந்திரியங்களால் விவகரிக்கப் படுகின்றனவாகவும் கருதப்படுகின்றன. இவ்வாறு பேதம் சொல்லப்படுகின்றது.

விசாரிக்கின் ஜாக்கிரத்தில் போலவே சொப்பனத்திலும் சரீரங்களும், அவைகளுக் கன்னியமாக பதார்த்தங்களும் தோன்றுகின்றன. அந்தந்த இந்திரியங்கள் அந்தந்த பதார்த்தங்களை விஷயம் செய்கின்றன.

3. சொப்பன பதார்த்தங்கள் சொப்பனம் காணும் ஒருவனுக்கே அனுபவம் என்றும், மற்ற எவருக்கும் தோன்றுவதில்லை என்றும் சொல்லப்படுகின்றது. இது உண்மையல்ல. ஏனெனின், சொப்பன உலகத்திலும் சூரியன், சந்திரன், நட்சத்திராதிகள் தோன்றுகின்றன. ஜாக்கிரத்தில் போலவே அநேக மனிதர்களும் அவைகளைப்பார்த்து அனுபவிக்கிறார்கள்.

4. ஜாக்கிர பதார்த்தங்கள் ஆயிரக்கணக்கான வருஷங்கள் இருப்பனவாகவும், சொப்பன பதார்த்தங்கள் சில மணி நேரம் இருப்பனவாகவும் தோன்றுகின்றன.

உண்மை விசாரிக்கின் ஜாக்கிர பதார்த்தங்களைப் போலவே சொப்பன பதார்த்தங்களும் ஆயிரக்கணக்கான வருஷங்கள் இருப்பனவாக சொப்பனம் காணும் காலத்தில் தோன்றுகின்றன. ஆனால், அந்தந்த கால அளவு அந்தந்த அவஸ்தைக்குப் பொருந்தியவையாக இருக்கின்றது.

5. சொப்பனத்தில் காணும் ரூ. அ. பை. ஜாக்கிரத்திலுள்ள பதார்த்தங்களை வாங்கப் பிரயோஜனப்படுகிறதில்லை என்று சொல்லப்படுகின்றன. அப்படியே ஜாக்கிரத்தில் காணும் ரூ. அ. பையும் சொப்பனத்திலுள்ள பதார்த்தங்களை வாங்க பிரயோஜனப்படுகிறதில்லை. அந்தந்த அவஸ்தையிலுள்ள பணம் காசு ஆங்காங்கு சத்தியமும் ஆங்காங்குள்ள பதார்த்தங்களை மாத்திரம் வாங்கவும் பிரயோஜனப் படுகின்றன. ஆகையால் ஜாக்கிர சொப்பன அவஸ்தைகள் சமம்.

6. ஜாக்கிரத்தில் கிரமமாகவும் புத்திக்கு பொருந்தியதாகவும் பதார்த்தங்கள் தோன்றுகின்றன. சொப்பனத்திலோ, தன் தலையை துண்டித்து தன் கையில் வைத்திருப்பது போலும், மனிதன் பறப்பது போலும், தான் இறந்ததற்காக தான் அழுவதாகவும் இவ்வாறு விபரீதமானவும் புத்திக்கு ஒவ்வாதனவானவுமாகிய காட்சிகள் காணப்படுகின்றன. ஜாக்கிர அவஸ்தையை நோக்க இவைகள் விபரீதமாக தோன்றினும் சொப்பன அவஸ்தையில் இவைகள் சகஜமாகவும், சர்வசாதாரணமாகவும் நியாயத்திற்கு ஒத்ததாகவும் தோன்றுகின்றன. ஒவ்வொரு அவஸ்தையிலுள்ள தேசம், காலம், பொருள், விவகாரம் மற்ற அவஸ்தையோடு விரோதமாகத் தோன்றினும் அந்தந்த அவஸ்தையில் அவைகள் சகஜமாகவும், நியாயமாகவும், பொருந்தியதாகவும் இருக்கின்றன. ஆகையால் ஜாக்கிரம் சொப்பனத்தைப் போல் சமமும் மித்தையுமாம்.

## 9-வது நமுனு.

### தேகம் மூன்றற்கும் நான் வேறு.

I ஸ்தூலம், சூட்சுமம், காரணம் என சரீரங்கள் மூன்று. பஞ்சீகரணம் செய்யப்பட்ட ஸ்தூல பூதங்களால் ஆக்கப்பட்டதும், தோல், இரத்தம், மாமிசம், எலும்பு, நரம்பு, மஜ்ஜை ஆகிய 6 தத்துவங்களோடு கூடியதுமானது ஸ்தூல சரீரம். சாதாரணமாக அவிவேகிகளும், பாமரர்களும் இந்த ஸ்தூல சரீரத்தையே நான் என்று விவகரித்து வருகின்றனர். உண்மையில் நான் என்பது இந்த ஸ்தூல சரீரத்திற்கு வேறாய், பிறப்பு இறப்பு அற்றதாயும், அறிவு வடிவமாயும், ஆனந்தவடிவமாயும் இருக்கிறது. இதற்கே ஆத்மா என்று பெயர். இந்த ஆத்மாவாகிய நான் ஸ்தூல சரீரத்திற்கு வேறு என்பது கீழ்கண்ட யுக்திகளால் நிரூபிக்கப்படுகிறது.

1. ஸ்தூல தேகம் பிறப்பு இறப்புகளோடு கூடியது. இதை ஆத்மா என்று சொல்லும் பட்சத்தில் ஆத்மாவிற்கு ஜன்மம், மரணம்ஒப்பவேண்டிவரும். அதனால்ஆத்மா அநித்தியமாகும். இந்த வார்த்தை கர்மகாண்டி முதலிய பரலோக வாதிகளாகிய ஆஸ்திகர்

களுக்கும் உடன் பாடல்ல. ஏனெனின் ஆத்மா உற்பத்தியுடைய தாகுமாயின் நாசமுடையதுமாகும். அதனால் பூர்வ ஜன்மத்தில் செய்யப்படாத கர்மத்தால் சுக துக்கங்களினனுபவமும், இஜ்ஜன்மத்தில் செய்யப்பட்ட கர்மம் அநுபவமின்றி நசித்தலுமாகிய இவ்விரண்டு தோஷங்களும் உண்டாகும். ஆகையால் கர்மவாதியின் மதப்படி ஆத்மாவை கர்த்தா, போக்தா என்று ஒப்பினும் ஜனனம் மரணம் இல்லாததாகவே ஒப்பவேண்டியதாகும். ஆகையால் பிறப்பு இறப்புகளற்ற ஆத்மாவாகிய நான் பிறப்பு இறப்புகளோடு கூடிய ஸ்தூல சரீரத்திற்கு வேறு.

2. எதனிடம் நான் என்னும் விவகாரம் உண்டாகுமோ அதனிடம் எனது என்னும் விவகாரம் உண்டாகாது. என்னுடைய சட்டையினிடத்து 'என் சட்டை' என்று விவகாரம் உண்டாவது போல் ஸ்தூல சரீரத்திலும் 'என்கை,' 'என்கால்,' 'என்தலை' என்று விவகாரம் உண்டாவதால் சட்டை எனக்கு வேறுயிருப்பது போல் இத்தூல சரீரமும் எனக்கு வேறு.

3. எது எதனால் அறியப்படுகிறதோ அது அதனின்வேறு. ஸ்தூல சரீரம் என்னால் அறியப்படுவதால் அது எனக்கு (ஆத்மாவிற்கு) வேறு.

4. எது மாறும் சுபாவமுடையதோ அது காலாந்தரத்தில் நாசமடையும். ஸ்தூலசரீரம், பிறப்பு, இறப்பு, வளர்ச்சி, விகாரம், குறைவு, மரணம் என்னும் 6 விகாரங்களோடு கூடியிருப்பதால் நாசமுடையதாயிருக்கிறது. ஆகையால் ஸ்தூல சரீரம் நிர்விகார ஆத்மாவாகிய எனக்கு வேறு.

5. எது பரிச்சின்னமோ அது ஜடம். ஸ்தூல சரீரம் பரிச்சின்னமாக இருப்பதால் அது ஜடம். ஆத்மா வியாபகமாயிருப்பதால் அது சைதன்னிய வடிவமாய் இருக்கிறது. ஆகையால் நானாகிய ஆத்மா ஸ்தூல சரீரத்திற்கு வேறு.

எதனால் நான் ஸ்தூல தேகம் அல்லவோ அதனால் அதன் தர்மங்களாகிய, பெயர், ஜாதி, ஆசிரமம், நிறம், சம்பந்தம் (பிதா

புத்திரன், குரு சிஷ்யன், ஸ்திரீ புருஷன்) பரிமாணம் (நெட்டை குட்டை, பருமன் மெலிவு, கோணல் ஒழுங்கு) நான் அல்ல.

II சூட்சும பூதங்களால் ஆக்கப்பட்ட ஞானேந்திரியங்கள் 5, கர்மேந்திரியங்கள் 5, பிராணன் 5, அந்தக் கரணம் 5, ஆக 20 தத்துவங்களோடு கூடியது சூட்சும சரீரம். இதையே பிராணமய, மனோமய, விஞ்ஞானமய, கோசங்களாகச் சொல்லுகிறார்கள். ஆத்மாவாகிய நான் சூட்சும சரீரத்திற்கு வேறு என்பது கீழ்கண்ட யுக்திகளால் நிரூபிக்கப்படுகிறது.

1. சூட்சும சரீரம் ஜடம். ஆத்மாவாகிய நான் சைதன்னியம். ஆகையால் நானாகிய ஆத்மா சூட்சும சரீரத்திற்கு வேறு.

(சிலர் மனதை சைதன்னியமாக மயக்கத்தால் சொல்லுவர். வாஸ்தவத்தில் மனம் ஜடம்.)

2. சூட்சும சரீரம் மாறுதலுடையது. ஆத்மா மாறுதலற்ற நிர்விகார சொரூபம். ஆகையால், ஆத்மா சூட்சும சரீரத்திற்கு வேறு.

3. எதனிடம் நான் என்னும் விவகாரம் உண்டாகுமோ, அதனிடம் எனது என்னும் விவகாரம் உண்டாகாது. என்னுடைய வீட்டினிடத்து 'என் வீடு' என்று விவகாரம் உண்டாவது போல், சூட்சும சரீரத்திலும் 'என்னுடைய கண்,' 'என்னுடைய புத்தி,' 'என்னுடைய பிராணன்' என்று விவகாரம் உண்டாவதால், வீடு எனக்கு வேறாயிருப்பது போல் இச் சூட்சும சரீரமும் எனக்கு வேறு.

4. எது எதனால் அறியப்படுகிறதோ அது அதனின் வேறு. சூட்சும சரீரம் என்னால் அறியப்படுவதால், அது எனக்கு வேறு.

இவ்வாறு சூட்சும சரீரம் நானல்ல என்று அறிவதால் அதன் தர்மமாகிய புண்ணிய பாவங்களின் கர்த்திருத்துவமும் அவற்றின் பலனாகிய சுகதுக்கங்களின் போக்திருத்துவமும்; இகலோக

பரலோகங்களின் கமனுகமனமும் (போக்கு வரவும்); வைராக்கிய சமதமாதி சாத்துவீக விருத்திகளும், இராகத்துவேஷ ஹர்ஷாதி இராசத விருத்திகளும்; நித்திரை, சோம்பல், மறதி முதலிய தாமத விருத்திகளும், அப்படியே பசி, தாகம், அந்த மந்தப் படுத்துவம் (குருடு இத் தன்மை, மந்தத் தன்மை, தெளிவு) முதலியவைகளும் நானல்ல.

III அவித்தையை (அறியாமையை) காரண சரீரமென்பர். இது ஞானத்தால் நசிக்கப் படுவதால் சரீரமென்றும், ஸ்தூல, சூட்சும சரீரங்களுக்கு காரணமாக யிருப்பதால் (இந்த அவித்தையை) காரண சரீரமென்றும் கூறுகிறார்கள். ஆத்மாவாகிய நான் காரண சரீரத்திற்கு வேறு என்பது கீழ்கண்ட யுக்திகளால் நிரூபிக்கப் படுகிறது.

1. காரண சரீரம் ஜடம். ஆத்மாவாகிய நான் சைதன்னியம்.

2. காரணசரீரம் மாறுதலுடையது. இது ஸ்தூல, சூட்சும சரீரங்களாக மாறுகிறது. ஆத்மாவோ மாறுதலற்ற நிர்விகார சொரூபம்.

3. எதனிடம் நான் என்னும் விவகாரம் உண்டாகுமோ, அதனிடம் எனது என்னும், விவகாரம் உண்டாகாது. "என்னுடைய அறியாமை" என்று உண்டாவதால் மமதைக்கு விஷயமாகிய அறியாமை அகந்தைக்கு (நான் என்பதற்கு) விஷயமாகாது.

4. எது எதனால் அறியப்படுகிறதோ அது அதனின் வேறு. காரணசரீரம் என்னால் அறியப் படுவதால் அது எனக்கு வேறு.

ஆகையால் நான் (ஆத்மா) காரணசரீரத்திற்கு வேறு.

ஓம் தத் சத்.

ஸ்ரீ அத்வைத பிரகடன சமாஜம்,

மதுரை.